# திருவள்ளுவர்

365

அல்லது

# வாழ்க்கை விளக்கம்

1586/2

மு. வரதராசன்

(தமிழ்ப் பேராசிரியர், பச்சையப்பன் கல்லூரி;
மொழிநூல், தமிழ் நெஞ்சம் முதலியவற்றின் ஆசிரியர்)

வெளியீடும் விற்பனையும்:

பொதிகைப் பதிப்பகம் லிமிடெட்

கடலூர், என். டி.

ரூ.

# அணிந்துரை

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’—திருமூலர்.

திருவள்ளுவர் பிறப்பு வளர்ப்பு முதலியவற்றைப் பற்றிய உண்மை வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. அவரது வரலாறு பலவாறு பகரப்படுகிறது. இந்நாளில் வழங்கிவரும் அவர்தம் வரலாறுகளெல்லாம் புனைந்துரைகளே. திருவள்ளுவர் தமிழ் நாட்டிற் பிறந்து வளர்ந்தவர் என்பதும், இல்வாழ்க்கையில் நின்று ஒழுகினவர் என்பதும், மக்களை ஈன்றவர் என்பதும், தெய்வப் புலவர் என்பதும், அறவோர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றன.

நாடும் நூலும்

திருவள்ளுவர் தமிழ் நாட்டில் தோன்றியவர்; திருக்குறள் என்ற நூலை யாத்தவர். இங்கே அவர் தோன்றிய நாட்டுக்குச் சிறப்பளிப்பதா? அல்லது அவர் யாத்த நூலுக்குச் சிறப்பளிப்பதா? நூலுக்குச் சிறப்பளிப்பதே சால்பு. ஏன்? திருக்குறள் தமிழ்நாட்டுக்கு மட்டும் பயன்படுவதாய் அமையவில்லை. அஃது உலகுக்குப் பயன்படுவதாய் அமைந்துள்ளது. நாட்டினும் உலகம் பெரிதன்றோ?

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை ஈன்ற பெருமை தமிழ் நாட்டுக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்; இறுமாப்படையலாம். ஆனால் திருவள்ளுவரைத் தமிழ் நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும்; சிறையாகும்.

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை உலக வர் என்று கோடலே சிறப்பு. 'வள்ளுவன் தன்னை உலகி னுக்கே தந்து - வான் புகழ் கொண்ட தமிழ் நாடு' என்று பாரதியார் பாடியதும் ஈண்டுக் கருதற்பாலது.

உலக நூல்

திருவள்ளுவர் நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற முப்பாலால் ஆக்கப்பட்டது. அறமும் பொருளும் காதலும் ஒரு வகுப்பார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ, ஒரு நிறத்தார்க்கோ, ஒரு மொழி யார்க்கோ, ஒரு நாட்டார்க்கோ உரியன அல்ல. அவை மன்பதைக்கு - உலகுக்குப் - பொது. திருக்குறளில் - எழு வாய் முதல் இறுவாய் வரை - உலகு என்னுஞ் சொல் லும், பொதுமைப் பொருளுணர்த்தும் சொற்களும் சொற் றொடர்களும் தக்க இடங்களில் திகழ்கின்றன. இன்னோ ரன்ன குறிப்புக்கள், திருக்குறள் உலக நூல் என்பதை வலியுறுத்துவன.

தமிழ்நாடும் உலகமும்

திருவள்ளுவர் தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்த காலத்தில் தமிழ் நாடு உலகுடன் தொடர்பு கொண் டிருந்ததா? இல்லை; பெரிதும் இல்லை. அக்காலத்தில் தமிழகத்தில் அவர் வாயிலாக உலக நூல் ஒன்று எவ்வாறு மலர்ந்தது?

நாம் வாழும் இவ்வுலகம் தோன்றிச் சுமார் இருநூறு கோடி ஆண்டுகளாயின. முதல் ஒரு நூறு கோடி ஆண்டு, இவ்வுலகம் அழற்பிழம்பாய், அனலாவியை உமிழ்ந்து கிடந்தது. பின்னே அது படிப்படியே தணியத் தொடங்கிற்று. அனல் தணிந்து தணிந்து, இதுபோழ்து ஏறக்குறைய நாற்பது கல் தொலைவில் கனன்றுகொண் டிருக்கிறது. தணிவு உற உற, ஆங்காங்கே, அனல்

நின்று நின்று, வெம்மை அலைகளைக் கொழித்துச் சென்றது. அலைகள் யாண்டும் ஒரே விதமாகக் கொழிக்கவில்லை ; சில இடங்களில் வன்மையாய், சில இடங்களில் மென்மையாய், சில இடங்களில் இடைமை யாய்க் கொழிக்கலாயின. வன்மை மென்மை இடைமைக் கேற்ற வண்ணம் நிலத்தில் தட்ப வெப்பம் தவழும்.

அனல் முதல் முதல் தணியத்தொடங்கிய இடம் தமிழ் நாடு. இஃது ஆராய்ச்சியாளர் கண்ட உண்மை. தமிழ் நாட்டின் தட்ப வெப்ப நிலையோ வன்மையதும் அன்று ; மென்மையதும் அன்று ; இடைமையது. தமிழ்நாட்டின் முதன்மைத் தணிவும் தட்ப வெப்ப நிலையும் அதைப் பல வழியிலும் பண்படுத்தின. அதனால் தமிழ் நாட்டின் பண் பாடு தொன்மையதாயிற்று. முதன்மையும் தொன்மையும் வாய்ந்த பண்பாட்டில் உலக வாழ்க்கைக் கூறுகள் கருக் கொண்டன. கருக்கொள்ளல் இயல்பு. அக்கரு, தெய்வப் புலவராகிய திருவள்ளுவருக்குப் புலனாயிற்று. ஆகவே, அவர்பால் உலக நூல் ஒன்று மலர்ந்ததென்க.

திருக்குறளின் உயிர்ப்பு

திருக்குறளின் உள்ளக் கிடக்கையைப் பலபடக் கூற லாம். அவற்றுள் உயிர்ப்பாய் ஒளிர்வது ஒன்று. அஃது 'உலகம் ஒரு குலம்' என்பது.

'உலகம் ஒரு குலம்' என்பது பழந் தமிழர் பண் பாட்டினின்றும் முகிழ்த்த ஒரு பெருங் குறிக்கோள். அக் குறிக்கோள் திருவள்ளுவருள் படிந்து நின்று வளர்ந்து ஒரு சீரிய உலக நூலாயிற்று. அந்நூலின் உள்ளுறை நுண்ணியதாய்ப் பல பேரறிஞரிடம் புகுந்து புகுந்து பலமொழிகளில் பரிணமித்தது. இவ்வாறு திருவள்ளுவர் கருத்துப் பெருகிப் பெருகி, இந்நாளில் விஞ்ஞானத்தில் விராவி மார்க்ஸியமாகவும், தெய்விகத்திற் கலந்து காந்திய மாகவும் பரவியுள்ளது. விஞ்ஞான மார்க்ஸியமும்,

தெய்விகக் காந்தியமும் ஒன்றிய ஒரு கொள்கையே இக் கால உலகை ஒருமைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது. இதை உணர்ந்து தொண்டாற்ற நம் நாடு முற்பட்டால் உலகம் நலம் பெறும்.

உயிர்ப்பும் அரண்களும்

'உலகம் ஒரு குலம்' என்னுங் கொள்கை திருக்குறளின் உயிர்ப்பு. திருக்குறள், உயிர்ப்பைமட்டும் புலப்படுத்தும் அளவில் நின்றுவிடவில்லை. உயிர்ப்பு, செவ்விய முறையில் இயங்கிப் பயன்படுதற்குரிய கருவி கரணங்கள், அரண்கள் முதலியவற்றையும் திருக்குறள் வகுத்துள்ளது. அவற்றிடை நுண்மையதாய் இயங்குவது உயிர்ப்பு. உயிர்ப்பை உணர்தற்கு உழைப்புத் தேவை.

அன்பு வித்து

'உலகம் ஒருகுலமாதல் வேண்டும்' என்று பேசுதல் எளிது; எழுதுதல் எளிது. பேச்சும் எழுத்தும் செயலாதல் வேண்டும். செயலை எழுப்ப வல்ல ஒரு கருவி வேண்டும். கருவி உளதா? உளது. அஃது எது? அஃது அன்பு. உலகை ஒரு குலமாக்குதற்கென்று அன்பு இயற்கையில் அமைந்துள்ளது. அவ்வன்பே வித்து. 'அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு - என்புதோல் போர்த்த உடம்பு' என்பது திருவள்ளுவர் வாய்மை.

வளர்ச்சி

அன்பு யாண்டு இல்லை? அது யாண்டும் உளது. அன்பில்லாத உலகமே இல்லை. அன்புண்மைக்கு அறிகுறி என்னை? வளர்ச்சி. வளர்ச்சியற்ற உலகம் உண்டு கொல்! இல்லை. மலை, மரம், புள், விலங்கு முதலியவற்றைக் கொண்ட அஃறிணை யுலகும், மக்களைக் கொண்ட உயர்திணை யுலகும் வளர்ந்தே வருகின்றன.

அவற்றை வளர்க்கும் பண்பு அன்பிடை மருவுகிறது. அன்பு நிகழ்த்தும் வளர்ச்சியே கூர்தல் - உள்ளது சிறத்தல் - (Evolution) என்பது. அன்புக் கூர்தல் புரியுந் திருவிளையாடலை எச்சொல்லால் சொல்வது! எவ்வெழுத்தால் எழுதுவது! கூர்தல்வழியே அன்பு, அஃறிணையுலகை மெல்ல மெல்ல வளர்த்தும், பின்னே அதை உயர்திணையுலகாக்கி விரைந்து விரைந்து வளர்த்தும் வரும் பான்மையை உன்ன ஓர் உள்ளம் போதுமோ

மக்கட் பிறவி

அன்பு விரைந்து பெருகும் வாய்ப்பு மக்கட் பிறவிக்கு உண்டு. அதனால் அப்பிறவி விழுமியதென்று ஆன்றோரால் போற்றப் பெற்றது. மக்கட் பிறவி விழுமியதே. எப்பொழுது? அப்பிறவி தன்மாட்டுக் கெழுமியுள்ள அன்பு வளர்ச்சிக்குரிய வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்தினால், அது விழுமியதாகும். இல்லையேல் அது விழுமியதாகாது.

வாழ்க்கைக் கலை

அன்புவழி வாழ்க்கை வளர்தல் வேண்டும். அவ்வழி வளரும் வாழ்க்கையே பண்பும் பயனும் உடையதாகும். பண்பும் பயனும் உடைய வாழ்க்கையே ஒரு கலை. அவ்வாழ்க்கைக் கலை அன்பிலே வளர்ந்து உருக்கொள்வ தென்பதை மறத்தலாகாது. வாழ்க்கைக் கலையே மற்றக் கலைகளின் தாயகம்.

திருவள்ளுவர் நெறி

வாழ்க்கைக் கலையை உலகுக்கு உதவினோர் பலர். அவருள் குறிக்கத் தக்க பண்டைச் சான்றோர் ஆதிமனு, அரிஸ்டாட்டல், திருவள்ளுவர் முதலியோர். ஆதி மனுநெறி செவ்வனே செழித்துவந்தது. இடைநாளில் மனு என்ற

பெயரால் தோன்றிய சிலர் பழைய செந்நெறிக்குக் கேடு சூழ்ந்தனர். அவரால் பிறப்பில் உயர்வு தாழ்வு, பெண்ணடிமை, தீண்டாமை, கண்மூடி வழக்கங்கள் முதலியன கற்பிக்கப்பெற்றன. அவை தூறுகளாய்ச் செந்நெறியை மறைத்தன. இவ்வாறு ஆதிமனுநெறி குலைந்தது. அரிஸ்டாட்டல் வழியில் பொறாமை, நாட்டாசை, சுரண்டல், இகல், போர், கொலை முதலிய கொடுமைகள் மலியலாயின. இம் மலிவால் அரிஸ்டாட்டல் வழி இரத்த ஆறுகியது. திருவள்ளுவர் நெறியோ அறத்தை அடிப்படையாக் கொண்டது. அறத்தில் மாசு படிதல் அரிதன்றோ? அதனால், திருவள்ளுவர் நெறி சிதைவுபடவில்லை. அறத்தை அடிப்படையாக் கொண்ட எதுவும் சிதைவுபடாது.

*அறத்தின் இயல்*

திருவள்ளுவர், அறத்தை 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறம்' என்றும், 'அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும் - இழுக்கா இயன்ற தறம்' என்றும் விளக்கியுள்ளனர். இஃது ஊன்றி ஊன்றி முன்னத் தக்கது. மனத்தின் முழுத் தூய்மையே அறம் என்பது திருவள்ளுவர் கருத்து.

*முறைகள்*

மனத்துக்கண் மாசிலா அறநிலையை எய்துதற்குத் திருவள்ளுவர் வகுத்த முறைகள் போற்றற்குரியன. இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணைநலம், மக்கட்பேறு, அன்பு முதலிய அதிகார வைப்பு முறைகளை நோக்குக. அவற்றை நோக்க நோக்கத் திருவள்ளுவர் கோலிய அறநெறி புலப்படும்.

*அன்பும் அறமும்*

இல்வாழ்க்கையாலும், அதன் சார்புகளாலும் அன்பு எழுகிறது. அன்பு மனமாசைக் கழுவுங் கருவியாகிறது.

மனமாசற்ற நிலையே அறம் என்பது. அறத்தை விளங்க வைப்பது அன்பு. இதற்கு விரிவுரை வேண்டுவதில்லை. திருவள்ளுவர் கண்ட நெறி, அன்பால் தெளிவுறும் அறத்தை அடிப்படையாக் கொண்டது. இதை உளங் கொண்டு, திருவள்ளுவர் அருளிய வாழ்க்கைக் கலையில் ஆழ்ந்து திளைத்தால், அஃது அன்புக் கலை - அறக்கலை - என்பது உறுதிப்படும். அக்கலை, உலகை ஒரு குலமாக்குந் தகைமையது என்று சொல்லலும் வேண்டுமோ?

*முப்பால் நுட்பம்*

திருவள்ளுவர் கலை முப்பாலால் ஆகியது. அவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்பன. 'உலகம் ஒரு குலம்' என்பதற்குக் கால்கொள்ளும் இடம் காமத்துப்பால். அக்காலுக்கு உரம் அளிப்பது பொருட் பால். இரண்டையும் ஒழுங்கில் இயக்கிக் காப்பது அறத்துப்பால். மூன்றன் குறிக்கோளும் 'உலகம் ஒருகுல மாதல் வேண்டும்' என்பதே.

*உரையும் ஆராய்ச்சியும்*

இத்துணைச் சிறப்பு வாய்ந்த திருக்குறளுக்கு உரை கண்டவர் பலர்; ஆராய்ச்சி வேய்ந்தவர் சிலர். உரையும் ஆராய்ச்சியும் காலத்துக்கேற்றவாறு பிறப்பன. இப் பொழுது புது உலகம் பூத்து வருகிறது. அதற்கேற்ற உரையும் ஆராய்ச்சியும் வேண்டும்.

*திருக்குறள் ஒரு சுரங்கம்*

திருக்குறள் ஒரு சுரங்கம். அஃது அவ்வக்கால உல கைப் புரக்கும் பொருள்களை அவ்வப்போது வழங்கும் பெற்றியது. அதினின்றும் இதுகாறும் அறிஞரால் எடுக் கப்பட்ட பொருள் சிலவே; மிகச் சிலவே. இவ்வேளையில்

திரண்டுவரும் புது உலகமும், இனித் திரளப்போகும் பலவகை உலகங்களும் ஏற்கத்தக்க பொருள்கள் இன்னும் திருக்குறளில் மிடைந்து கிடக்கின்றன. திருக்குறட் சுரங்கம் வற்றாதது.

இந்நூல்

திருக்குறளைப்பற்றிய ஆராய்ச்சிகள் புதுமைப் போர்வையில் இனி வெளிவருவது நல்லது. இப்பொழுது ஒன்று வெளிவந்துள்ளது. அது 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்னும் இந்நூல். இதிலே புது உலக மணங் கமழ்கிறது.

ஆசிரியர்

இத்தகைய நூலை யாத்தவர் வித்துவான் - மு. வரதராசனார், எம். ஓ. எல். ஆசிரியர் வரதராசனாரை யான் நீண்ட காலமாக அறிவேன். அவரை யான் முதல் முதல் பார்த்தபோது அவர்தம் மலர்ந்த விழியும், கூரிய மூக்கும், பரந்த நெற்றியும், நீண்ட முகமும், நிமிர்ந்த பிடரியும் என்னுள்ளத்தைக் கவர்ந்தன. இவை, அறிவுக்கு உறையுளாயுள்ள மூளையின் திறத்தை அறிவிக்கும் புறக்கருவிகள். அவர்பால் யான் அன்று கண்ட இளமை இன்றும் பொலிகிறது. அவர் என்றும் இளைஞராயிருத்தல் வேண்டுமென்பது எனது வேட்கை. கவலைக் காட்சியை அவர் முகம் வழங்குவதில்லை. நல்ல மூளையும், நிலைத்த இளமையும், கவலை காணா முகமும் ஒருவரைச் சிறந்த கலைஞராக்கும் நீர்மையன. ஆசிரியர் வரதராசனார் பெருங் கலைஞராய் நாட்டை நல் வழியில் ஓம்புந் தொண்டராவர் என்று யான் நினைந்ததுண்டு. அந்நினைவு பழுது படவில்லை. அவர் இயற்றியுள்ள நூல்கள் நாட்டை நல் வழியில் ஓம்பிவருதல் கண்கூடு.

*புரட்சி*

புரட்சி - புரட்சி - என்று பேசப்படுகிறது ; எழுதப் படுகிறது. இந்நாளில் புரட்சிக் கூக்குரல் எழாத இடமே இல்லை. உண்மையில் புரட்சி நிகழ்த்துவோர் யார்? கலைஞர் - கலைஞர் என்று வரலாறு கூறும். தோழர் வரதராசனார் ஒரு கலைக்கழகம்; பொறுமைக்கு உறையுள்; அமைதிக்கு நிலைக்களன். புரட்சி அவர் நெஞ்சில் பொங்குகிறது ; வாயில் வழிகிறது ; கையில் நிகழ்கிறது. தோழர் புரட்சியை இந்நூலில் பரக்கக் காணலாம்.

திருக்குறள் பால்வைப்பைப் பார்ப்போம். அஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று வைப்பைப் பெற்றிருக்கிறது. இவ்வைப்பைத் தலைகீழாக்கு கிறார் வரதராசனார். புது உலக மக்களுக்குத் திருக்குறள் ஆராய்ச்சித்துறைகளை எளிமையாக்குதல் வேண்டுமென் பது அவர் கருத்துப் போலும். நூலின் தோற்றுவாயி லேயே புரட்சி வீறுகிறது. புரட்சி, நூல் நெடுகப் புகுந்துள்ளது.

*புது உலகம்*

வளர்ச்சி இயற்கை. அதைக் கெடுக்கச் சிற்சில தடை கள் குறுக்கிடுவதுண்டு. அத்தடைகளைக் களைந்தெறிய இயற்கை எழுகிறது ; அவ்வெழுச்சி புரட்சியாகிறது ; புரட்சியால் புது உலகம் பிறக்கிறது.

இந்நூலிடை ஆசிரியர் புரட்சி செய்துள்ளார். அப் புரட்சியின் அடியில் அறம் செறிகிறது ; மூர்க்கம் அலற வில்லை. அறப்புரட்சி திருக்குறள் நலத்துக்குத் துணை போவது.

அறப் புரட்சியே புது உலகைப் படைக்க வல்லது. மூர்க்கப் புரட்சி புது உலக எழுச்சிக்குத் தடை

செய்யினுஞ் செய்யும். மூர்க்கப் புரட்சி மூர்க்கத்தையே வளர்க்கும். அது கொள்ளத்தக்கதன்று.

காமத்துப்பால்

திருவள்ளுவர் காமத்துப்பாலை நோக்குவோம்; அதைப் பற்றி ஆசிரியர் வரதராசனார் நிகழ்த்தியுள்ள ஆராய்ச்சி யுரையையும் நோக்குவோம். என்ன காணப்படுகிறது? பழமையினின்றும் புதுமை அரும்புதல் காணப்படுகிறது.

'காமத்திற் சிறந்தது காதற் காமம்' என்பது ஆன்றோர் மொழி. திருவள்ளுவர் காமத்துப்பால் காதலை அறிவுறுத்துவது. காதல், அன்பின் இறுதிப்படி. அன்புக்குப் பலதிறப் படிகள் உண்டு. அவற்றுள் காதல் இறுதியது. காதல் பெருகி அன்பின் முழுமையாகும்.

அன்பு எழுச்சிக்கும் நிகழ்ச்சிக்கும் நெகிழ்ச்சிக்கும் சேர்க்கை இன்றியமையாதது. சேர்க்கை இயற்கையின் பாற்பட்டது. தனிமை செயற்கையின்பாற்பட்டது. இயற்கைக் கூறுகளில் எதை ஆய்ந்தாலும், அது சேர்க்கை பெற்றிருத்தல் காணலாம். அணுமுதல் அண்டம்வரை சேர்க்கை பெற்றிருத்தல் வெள்ளிடைமலை. இயற்கை அமைப்பில் சேர்க்கையற்ற இடமேயில்லை. இயற்கை, சேர்க்கையை அறிவுறுத்தும் ஒரு பள்ளி என்று கூறலாம். சேர்க்கை இல்லையேல் வளர்ச்சி ஊக்கம் பெறாது சாம்பும். இஃது இயற்கைச் சட்டம்.

இயற்கையில் பிரிவு இல்லையோ என்று சிலர் கருதலாம். இயற்கையில் பிரிவு உண்டு. அப்பிரிவு நிலைபேறுனதன்று. அது சேர்க்கைக்கு ஆக்கந் தேட நேர்வதாகும். ஊடலைப் பற்றி அகநூல் கூறுவதை ஓர்க.

சேர்க்கை பலவிதம். அவற்றுள் மக்கள் சேர்க்கையே சிறந்தது. மக்கள் சேர்க்கை காதலால் விளைவது; மற்றச் சேர்க்கைகள் காமத்தால் விளைவன. இரண்டுக்கும்

உள்ள வேற்றுமை இந்நூலுள் தெளிவுசெய்யப்பட்டிருக்கிறது.

மிகமிகப் பழைய காலத்தில் ஓர் ஆடவன் பல மகளிரைக் கூடலும், ஒரு மகள் பல ஆடவரைக் கூடலும் நிகழ்ந்துவந்தன. நாளடைவில் பின்னையது அருகியது. முன்னையதை வீழ்த்தத் திருவள்ளுவர் காமத்துப்பாலில் புரட்சி செய்தார். அப்புரட்சி இந்நூலாசிரியர்க்கு நன்கு புலப்பட்டது.

திருவள்ளுவர் புரட்சி சில இடங்களில் பரவியது; இன்னும் பல இடங்களில் பரவவில்லை. அது யாண்டும் பரவுங் காலம் நெருங்கியுள்ளது. ஒருவன் ஒருத்தியுடனும், ஒருத்தி ஒருவனுடனும் வாழ்வதே காதல் வாழ்க்கை என்று காமத்துப்பால் வலியுறுத்துகிறது. இது தோழர் ஆராய்ச்சியில் உள்ளங்கை நெல்லிக்கனியெனப் பிறங்குகிறது.

திருவள்ளுவர் காமத்துப்பாலில் ஒருவன் ஒருத்தி காணப்படுகின்றனர். இருவரையுங் காதல் ஒருமைப்படுத்துகிறது. ஒருமை மன இயல், கூறு, தூய்மை முதலியன இந்நூற்கண் விளக்கம் பெற்றுள்ளன. காதல் வாழ்க்கையில் மனம் தூய்மைப்படுவதை ஆசிரியர் பொருந்திய சொற்களால் விரித்துள்ளது மக்களை வயப்படுத்தும். காதற் சேர்க்கைவாழ்க்கை, உலகை ஒரு குலமாக்குதற்குரிய விதை. சேர்க்கைவாழ்க்கை இல்லையேல் உலகம் ஒரு குலமாதல் அருமை. இயற்கைஅன்னை உலகை ஒரு குலமாக்க முனைந்தே நிற்கிறாள். அவள் முனைந்தும் உலகம் ஏன் இன்னும் ஒரு குலமாகவில்லை? காரணம் உலகில் சில இடங்கள் தனிமைவாழ்க்கைக்கு இரையாவதேயாகும். இஃது உலக வளர்ச்சியைத் தடைசெய்கிறது. தனிமை வாழ்க்கை தேக்கமுறுவது; அன்பை அடைப்பது. உலக வளர்ச்சிக்குத் துணைபோவது

சேர்க்கை வாழ்க்கையே. இவ்வாழ்க்கை காமத்துபபாலின் உள்ளுறை; சாரம்.

பொருட்பால்

பொருட்பாலில் உற்றுள்ள புரட்சி பெரிது. அரசு, கல்வி, உழவு முதலியன பொருட்பாலின் அணிகள். அரசின் உறுப்புக்கள் பல. அவற்றுள் ஒன்று போர்க்களன். அரசில் போர் இடம்பெறல் இயல்பு. திருவள்ளுவர் அரசிலும் போர் இடம் பெற்றுள்ளது? எப் போர்? கொலைப்போரா? வேறு?

திருவள்ளுவர் போரின் நுட்பங் காண இந் நூலாசிரியர் நெஞ்சம் விரைகிறது. விரைவு புரட்சியாகிறது.

திருவள்ளுவர் போரில் கொலைக்குறிப்பில்லை என்றும், இரத்தங் காணப்படவில்லை என்றும், அப் போர் மன்றப்போரை அதாவது கருத்துப்போரை உணர்த்துவது என்றும் ஆசிரியர் நெஞ்சம் நினைக்கிறது. அந்நெஞ்சம் வாழி!

வளர்ச்சிக்கு மன்றப்போர் என்னுங் கருத்துப்போர் தேவையே. அப்போர் பெருகப் பெருக உண்மை விளங்கிக்கொண்டேபோகும். உண்மை விளக்கம் உலகை ஒரு குலமாக்கும் வல்லமை வாய்ந்தது. மன்றப்போர் இல்லையேல் ஒருவர் கருத்துக்கு உலகம் பலியாகும்.

ஆசிரியர் வரதராசனார் திருவள்ளுவர் சுரங்கத்தில் பன்முறை மூழ்கி மூழ்கிப் பலதிற மணிகளைத் திரட்டிக் கொணர்ந்தவர். அவரது நெஞ்சம் திருவள்ளுவர் நெஞ்சுடன் உறவாடி உறவாடிப் பண்பட்டது. அந்நெஞ்சினின்றும் அரும்பும் கருத்துச் சிந்தனைக்குரியதே.

புது உலகம் கொலைப்போரைக் கடந்துநிற்கும் என்றும், அவ்வுலகில் தொழிற்சாலைகளெல்லாம் போர்க் கருவிகளை வடியா என்றும், மக்கள் வாழ்க்கைக்குத் தேவையான உற்பத்திகளை உதவும் என்றும் இக் காலத்

தில் புது உலகம் படைக்கப் பிறந்த அனைவரும் ஒருமுகமாக உரைத்துச்சென்றனர். இப்போரற்ற உலகம், பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே திருவள்ளுவர் நெஞ்சில் வடிவுபெற்றதென்று இந்நூலாசிரியர் நெஞ்சம் எண்ணுகிறது.

திருவள்ளுவர் காலத்தில் மன்னராட்சி நடைபெற்றது. அவ்வாட்சியைக் கண்ட திருவள்ளுவர் கண்ணும் கருத்தும் அதன் அளவில் கட்டுப்பட்டு நிற்கவில்லை. அவர் வாய்மையில் குடியாட்சியும் குலவுகிறது! திருவள்ளுவர் பெருநோக்கு என்னே! என்னே!

குடியாட்சி பலவிதம். அவற்றுள் பொதுமை அறம் புகும் மக்களாட்சி என்னும் குடியாட்சிமுறையே இக்காலப் போக்குக்கு உரியது. இம்முறை திருக்குறளில் இலைமறைகாயென இருத்தலைத் தோழர் வரதராசனார் எடுத்துக் காட்டுகிறார். பழைய மன்னராட்சி புதிய மக்களாட்சி ஆகிறது! இது புரட்சியன்றோ? இப் புரட்சிக்குத் திருவள்ளுவர் பொருளும் அறமும் இடந்தராமலில்லை.

உழவு அதிகாரப் புலத்தைத் தோழர் அறிவு உழுகிறது; உணர்வும் உழுகிறது. அவ்வுழவு, புது உலகுக்குரிய தொழில் வண்ணமாக அவர் அறிவுக்கும் உணர்வுக்கும் பொருளாகிறது.

பெண்வழிச் சேறல் என்ற அதிகாரம், பழைய உரையாசிரியர்க்கும், ஆராய்ச்சியாளர்க்கும் வழங்கிய காட்சியை இந்நூலாசிரியர்க்கு வழங்கவில்லை. காட்சியே மாறுகிறது. விரிவை நூலிற் பார்க்க.

### அறத்துப்பால்

அறத்துப்பால் ஆராய்ச்சியில் காமத்துப்பாலின் நுட்பமும், பொருட்பாலின் உள்ளுறையும் வட்டமிடுகின்றன; மனத்தில் மாசின்மை அதாவது மனத்தூய்மை

எங்கணும் மருவுகிறது ; யாண்டும் அகத்திணை - மனோ தத்துவம் - தாண்டவம் புரிகிறது.

ஈகை, புகழ் முதலிய அதிகாரங்கள் பழைய உலகைக் கடந்து புது உலகில் இவர்கின்றன. இஃது ஆசிரியர் உழைப்பின் பயன். ஆராய்ச்சி மலியும் இந் நூலில் ஊழ் பாழ்பட்டிருக்குமென்று எண்ணியே அப்பகுதியை விரைந்து விரைந்து பார்த்தேன். யான் எண்ணியவாறு ஊழ் பாழ்படவில்லை ; புதுமுறையில் வாழ்வுபெற்றே நிற்கிறது.

*வீட்டுப்பால் ?*

திருவள்ளுவர் வீட்டைப் பற்றித் தனிப்பால் ஏன் அருளவில்லை ? இவ்வினா இன்று எழுந்தது அன்று ; நேற்று எழுந்தது அன்று ; பலப் பல ஆண்டுகளுக்கு முன்னரே எழுந்தது. இதற்குப் பலவகை விடைகளும் அவ்வப்போது பிறந்தே வந்தன. வினாவும் விடையும் பழம்பாடமாயின.

அறம் பொருள் (புறம்) இன்பம் (அகம்) என்று கூறுவது பழந்தமிழர் மரபு. இதற்கு அவர்தம் நூல்கள் இன்றும் சான்றாக நிற்கின்றன. திருவள்ளுவர் அம் மரபையொட்டி வீட்டுப்பாலை விடுத்திருக்கலாம்.

வீடு ஓர் உலகு அன்று. அஃது எல்லையற்றது ; வாக்குமனம் கடந்தது. அதை எப்படி நினைப்பது ? சொல்வது ? அறம் பொருள் இன்ப வழிநின்று ஒழுகினால் விளைவு வீடாகும். வீடு விளைவு ; ஓர் இடமன்று.

திருவள்ளுவர் மனமாசற்ற நிலையை அறம் என்கிறார். அவ்வறத்தின் முழுநிலையே வீடாகும். பாயிரத்தில் திருவள்ளுவர் இறைவனை 'வாலறிவன்' என்றும், 'வேண்டுதல் வேண்டாமையிலான்' என்றும், 'அறவாழி அந்தணன்' என்றும் போற்றியுள்ளார். அச்செம்மொழிகள் 'அறமே இறை' என்பதை உட்கொண்டவை.

வீட்டைப்பற்றிய தனி நூல்கள் பின்னுளில் தோன்றின. அன்றுதொட்டு மக்கள் மனம் பெரிதும் அறம் பொருள் இன்பத்தில் படியாது வெறும் வீட்டிலேயே படியலாயிற்று. அவர்தம் நெஞ்சில் வீடு ஓர் உலகாயிற்று. அதனுல் அறம் பொருள் இன்ப ஒழுக்கத்தின் விளைவு வீடு என்ற உணர்வு சுருங்கியது ; அன்பொழுக்கம் குன்றியது ; அவா ஆட்சி பெற்றது ; போர்கள் பெருகின.

திருவள்ளுவர் கருத்தை விளக்கவந்த இந் நூலாசிரியரும் வீட்டு விரிவில் நுழைந்தாரில்லை. அவர் பாயிரத்தில் பகர்ந்துள்ள மொழிகளை ஆராய்க.

நுரை ஈரல்

திருக்குறள் அதிகாரங்களிற் பலப்பல இந்நூலுள் புரட்சிபெற்றிருக்கின்றன. புரட்சி புதுஉலகை அமைத்தே தீரும்.

இந்நூற்கண் பல இடங்களில் பொதுமையும் மனத் தூய்மையும் மிளிர்கின்றன. இரண்டும் நூலின் நுரை ஈரல்கள் என்று கூறல் மிகையாகாது. இவை ‘ உலகம் ஒரு குலம் ’ என்னும் உயிர்ப்பை இயக்குவன.

சில பொருள்கள்

மற்றும், காதலில் மனுநிலை, பொருளால் காதல் வளம் பெறல், காதல் வளம்பெருத இடத்தில் தீக் கலைகள் பெருகிப் பாவங்களை வளர்த்து நட்பு முதலியவற்றைக் குலைத்தல், நல்லுலக அமைப்பு, அரண் வேண்டா அரசியல், தொழில் பொருளின் உயிராக இலங்கல், நகர வாயிலில் சிற்றூர்கள் வாடி நிற்கவேண்டாமை, பண்டமாற்ருல் நன்மையும் பணமாற்ருல் தீமையும் பெருகல், ஒப்புரவின் அடிப்படை, சிக்கனம் அறத்தின் கூறு ஆதல், இன்னுசெய்யாமை உயிர்வளர்ச்சிக்குத் துணைபுரிதல், நெஞ்ச நிலையை அளக்குங் கருவி, பணப்போராட்டம்

மக்களின் மனநலத்தை ஒடுக்கல், உழைப்பு உணவு ஓய்வு பயிற்சி ஆகியவை ஒழுங்குபெறுதலால் அறம் விளங்கல், பொருள் ஒருபால் பெருகி மற்றொருபால் அருகலால் விளையும் கேடுகள் முதலிய வான்பொருள்கள் நூலை அழகுசெய்கின்றன.

மணிமொழிகள்

நூலின் உள்ளம் இனிது புலனாதற்கு ஆசிரியர் மணிமொழிகளில் இரண்டொன்றை அகழ்ந்து ஈண்டுப் பொறிப்பது நலமென்று தோன்றுகிறது. அவை வருமாறு:—

'ஆண் பெண் இருவரின் இரு வேறு மனங்கள் ஒன்று மற்றொன்றில் கரைந்துபோகும் தன்மையைக் காமத்துப்பால் கூறுகின்றது; கணவனும் மனைவியுமாகிய இருவர் ஒருமனம் உடையவராய் உலக நன்மை கருதி வாழும் தன்மையை இல்லறம் காட்டுகின்றது.'

* * * *

'உடம்பில் உயிர் வாழ்வதற்கு வேண்டிய அளவு கஞ்சிக்கே நாள்தோறும் போராடிக் காலம் கழிக்கின்றவர்கள் அன்பை வளர்ப்பது எங்கே?'

'உலகமெல்லாம் ஒருவனைப் பட்டினியால் வாட்டும் போது, அந்த உலகத்தில் அவன் உள்ளம் குளிர்ந்து வாழ முடியுமோ?'

'அக்காலத்தில் வாழ்க்கைப்போர் பொதுவாக இருந்தது; உலகத்திற்குப் பொதுவாகப் பெய்யும் மழையே காரணமாக இருந்தது; இக்காலத்து வாழ்க்கைப்போர் பெரும்பான்மையான மக்களுடையதாக இருந்தாலும் தனித்தனியாக அமைந்திருக்கின்றது; சிலரிடமே குவியும் பணம் காரணமாக இருக்கின்றது

* * * *

அண்மைப்புகழ் என்பது ஒருவனைச் சுற்றிவாழும் மக்கள் அவனுடைய நற்பண்புகளையும் நற்செயல்களையும் அறிந்து புகழ்வது. சேய்மைப்புகழ் என்பது ஒருவனைச் சுற்றியுள்ளவர்கள் வெறுத்தாலும் பழித்தாலும், தொலைவில் உள்ளவர்கள் அவனுடைய உண்மையான பண்புகளை அறியாமல் சிற்சில செயல்களைமட்டும் அறிந்து புகழ்வது.'

'உண்மையாகவே நல்ல பண்புகளும் நல்ல செயல்களும் நிறைந்த ஒருவருடைய புகழ் அண்மையிலும் பரவி, செல்வாக்கின் காரணமாகச் சேய்மையிலும் பரவுதல் உண்டு. ஆனால் இது மிகச் சிறுபான்மை. பெரும்பான்மையும் தனிப்பட்ட வாழ்க்கையில் ஒழுக்கக்கேடு முதலிய குறைபாடு மிக்கவர்கள் அவற்றை எல்லாம் செல்வம் செல்வாக்கு வாயிலாக மறைத்துச் செய்தித்தாள்களைப் பயன்படுத்திக்கொண்டு புகழுடையவர்களாக விளங்க முடிகின்றது.

இத்தகைய சேய்மைப் புகழைப் புகழ் என்னும் தூய பெயரால் குறிப்பதும் பொருந்தவில்லை. ஆகையால் விளம்பரம் என்னும் பெயரால் குறிக்கலாம்.'

*　　　*　　　*　　　*

கொலையைக் கடிந்து கூறப் புகுந்த திருவள்ளுவர் கொலையின் காரணம் பலவற்றையும் எண்ணினார். போர்களால் நடைபெறும் கொலைகளை எண்ணினார்; கொள்ளை முதலியவைகளால் நடக்கும் கொலைகளை எண்ணினார்; தனிப்பட்டவகையில் மக்களுக்குள் பகைமூண்டு அதனால் நடக்கும் கொலைகளையும் எண்ணினார்; வயிற்றுப் பசியைத் தணிக்க உணவுதேடி மற்ற உயிர்களைக் கொல்லும் கொலைகளையும் எண்ணினார்; உயிர் உடனே நீங்காவிட்டாலும் அதற்கு நிகரான துன்பங்களைச் செய்து வருத்தும் கொலைபோன்ற கொடுஞ் செயல்களையும் எண்ணினார். எல்லாக் கொலைகளுக்கும் அடிப்படையில்

ஒரு பெருங் குறை இருப்பதாக உணர்ந்தார். அது என்ன குறை?'

*　　*　　*　　*

'உலகத்தில் உள்ள விபசாரத்தில் பெரும்பங்கு பொருளுடையவரின் மயக்க வலையில் பொருளில்லாத வறியவர் விழுந்து அகப்பட்டுக்கொள்வதால் நிகழ்வதாகும். * * * வறுமையின் நெருக்கடி தாங்கமுடியாமல் பலர் ஒழுக்கக்கேட்டிற்கு ஆளாகின்றார்கள்.'

*　　*　　*　　*

இயற்கையில் கடவுள் தன்மையைக் கண்டு போற்றுவது உயர்ந்த நெறி. இயற்கையில் அமைந்துள்ள பலவற்றிலும் மழை மிகச் சிறந்தது. உலக வாழ்க்கை இடையறாமல் நடக்கவேண்டிய வகையில் இயற்கையை இயக்கிவரும் ஒரு பெரிய சக்தியை நினைந்து உருகுவதற்கு இது காரணமாக உள்ளது.'

**நூலின் பெற்றி**

**இந்நூல் ஒரு நன்னூல்; புதுமைப் பொதுநூல்; உலகம் ஒரு குலமாகத் துணைசெய்யும் நூல். இதனை உதவிய ஆசிரியர் வரதராசனார் வாழ்க.**

**காதல் ஓங்க; பொருள் பெருக; அறம் வளர்க; பொதுமைப் புது உலகம் பூக்க; உலகம் ஒருகுலம் ஆக.**

**'யாதும் ஊரே யாவரும் கேளிர்'—பூங்குன்றனார்.**

**திரு. வி. கலியாணசுந்தரன்**

# முன்னுரை

திருக்குறள் பலர்க்குப் பலவகையாகப் பயன்படும் சிறப்பு வாய்ந்த தனிநூலாகும். இலக்கிய ஆராய்ச்சியாளர் அதைச் சிறந்த இலக்கியமாகக் கற்றுக் கலைநயம் காணலாம். அறவோர் சமய நூலெனப் போற்றி ஒழுக்க முறைகளைக் காணலாம். அரசியலார் அரசியல் நூலென மதித்துப் பல நுணுக்கங்களைக் காணலாம். இவ்வாறே ஒவ்வொரு சாராரும் தம் தம் துறைக்கு ஏற்ற கருத்துக்களைக் காணலாம். பொதுவாக வாழ்க்கையை ஆராய்ந்து விளக்கியுள்ள எல்லா நூல்களும் இவ்வாறு பலர்க்குப் பல்வேறு வகையாகப் பயன்படுவனவே ஆகும்.

திருக்குறளை இலக்கியமாகக் கற்றுச் சொற் சுவை பொருட் சுவை முதலியன காணும் வகையில் நூல்கள் வெளிவந்துள்ளன. இவ்வாறே பிறதுறையாளர் தத்தமக்கு வேண்டும் கருத்துக்களைக் காணும் முயற்சியும் உள்ளது. ஆதலின் இந் நூலில் அத்தகைய ஆராய்ச்சி ஒன்றும் செய்யப்படவில்லை. திருவள்ளுவர் வாழ்க்கையை எவ்வாறு ஆராய்ந்துள்ளார், அவர் கண்டு விளக்கிய உண்மைகள் யாவை, அந்த விளக்கங்கள் இன்றைய வாழ்க்கைக்கு எவ்வளவில் பயன்படுவன என்னும் பகுதிகளே இங்கு ஒருவாறு எழுதப்பட்டுள்ளன.

திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர், அவர் இன்றுள்ள வாழ்க்கையை எவ்வாறு விளக்க முடியும் என்று வினவலாம். காலம் மாறினும் உண்மைகள் மாறுவதில்லை. காலத்தின் மாறுதல்கள் உடையின் மாறுதல்களைப் போன்றவை. அடிப்படை உண்மைகள் உயிர்போன்றவை. திருவள்ளுவர், வாழ்க்கை

யின் அடிப்படையாகவும் பொதுவாகவும் உள்ள உண்மை களைக் கண்டு எழுதியுள்ளமையால் பல்வேறு காலத்த வரும் அவற்றைப் போற்ற முடிகின்றது. அவ்வாறு போற்றும்போது தம் தம் காலத்திற்கு ஏற்றவாறு அவற்றை உணர்கின்றனர். இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாழும் நாமும் அவ்வாறு நம் வாழ்க்கை யமைப்புக்கு ஏற்றவாறு திருவள்ளுவரைக் கற்று உண்மைகளை உணர முடியும்.

நூல் இருவகை : தன் காலத்திற்கு நம்மை அழைத் துச் செல்வது ஒன்று ; நம் காலத்திற்குத் தான் வந்து உதவுவது மற்றொன்று. நூலைக் கற்கும் முறையும் இரு வகை ; வாழும் காலத்தை மறந்து நூலெழுதிய காலத் திற்குக் கற்பனைச் சிறகு கொண்டு பறந்து சென்று நூற் பொருளைக் கற்பது ஒருவகை. நூலெழுதிய காலம் எது வாயினும் அதைவிட்டு வாழும் காலத்திற்கே வந்து வழி காட்டும்படியாக நூலைப் போற்றிக் கற்பது மற்றொரு வகை. புலவருலகில் நின்று இலக்கியமாக மட்டும் போற் றப்படும் நூல்கள் முதல் வகையைச் சார்ந்தவை. இரண் டாம் வகை நூல்களோ, எல்லா மக்களுக்கும் பயன்படு வனவாய், ஆட்சிபுரியும் சட்ட நூல்களைவிடச் செல் வாக்கு உடையனவாய், மக்களின் உள்ளங்களே கோயில் களாய் வாழ்வன. திருக்குறள், பகவத்கீதை, கன்பூஷியஸ் நூல், பைபில், குர்ஆன் முதலியன இவ்வகையைச் சார்ந் தவை. இந்நூல்களில் எழுதிய எழுத்துக்கள் மறைந்து நிற்க, அறிவுறுத்தும் சான்றோரே முன்நிற்பர். திருக் குறளை இவ்வகையாகப் போற்றிக் கற்கக் கற்க, திரு வள்ளுவர் என்னும் தமிழ்ச் சான்றோர் முன்வந்து வழி காட்டக் காண்கின்றோம். இதுபற்றியே, திருக்குறளைத் திருவள்ளுவர் என்று வழங்கும் வழக்கும் காணப்படு கின்றது.

பகவத் கீதையைப் பற்றிக் காந்தியடிகள் எழுதும்போது, "இந்த நூலை மூளை கொண்டு கற்காமல் இதயம் கொண்டு உணர வேண்டும்" என்று குறித்துள்ளார். திருக்குறளையும் அவ்வாறே ஓதி உணர வேண்டும் என்னும் அவா நெடுங்காலமாக என்னுள் இருந்துவருகின்றது. அதன் தூண்டுதலால் இத்தகைய முயற்சியில் ஈடுபடலானேன்.

காதலும் பொருளும் வாழ்க்கைப் படிகள், அறமே வாழ்க்கையின் உயர்நிலை என்று விளக்கும் நோக்கத்தால் காமத்துப்பால், பொருட்பால், அறத்துப்பால் என்னும் முறையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இங்கு எல்லாக் குறள்களுக்கும் விளக்கம் கூறப்படவில்லை. விளக்கப் பட்டுள்ள குறள்களிலும் இக்காலத்திற்குச் சிறப்பாக ஒளிவீசும் மணிகளுக்குச் சிறப்பிடம் தரப்பட்டிருக்கின்றது. இன்றுள்ள வாழ்க்கைக்கு வந்து நம்மை நாம் ஆராயும்போதெல்லாம் கருத்துவேறுபாடு எழுதல் இயற்கை. ஆதலின் இம் முயற்சியில் காணும் கருத்து வேறுபாடுகளுக்கு இடந் தருமாறும் பிழைகளைப் பொறுத் தருளுமாறும் வேண்டுகின்றேன்.

என் முயற்சிக்கு ஊக்கம் அளித்துத் தமக்கே சிறப்பியல்பான முறையில் இனிய செந்தமிழ் நடையில் அணிந்துரை எழுதி நூலை அணிபெறச் செய்துள்ள பெரியார் திரு. வி. க. அவர்களுக்கு மிகப் பெரிதும் கடப்பாடுடையேன். காகித விலையுயர்வு முதலிய நெருக்கடி ஒன்றையும் பொருட்படுத்தாமல் நூலை வெளியிட்டு உதவிய பொதிகைப் பதிப்பகம் மானேஜிங் டைரக்டர் (கிழக்கு மருதூர் நிலக்கிழார்) திரு. தி. கு. நாராயணசாமி நாயுடு அவர்களுக்கு நன்றி செலுத்துகிறேன்.

சேத்துப்பட்டு
15—5—48

மு. வரதராசன்

# பொருளடக்கம்

| | | பக்கம் |
|---|---|---|
| அணிந்துரை (திரு. வி. க.) | ... | iii |
| முன்னுரை | ... | xxi |
| காமத்துப்பால் | ... | 1 |
| பொருட்பால் | ... | 53 |
| அறத்துப்பால் | ... | 252 |

# 1. காமத்துப்பால்

## மக்கள் வாழ்க்கை

உயிர் இயங்கத் தொடங்கியது. இயக்கத்திற்கு உடம்பு வேண்டும் அன்றோ? அவ்வாறு முதல்முதல் அமைந்த உடலில் ஊறு என்னும் உணர்வு ஒன்றே சிறந்துநின்றது. அந்த நிலையில் உயிர் கட்டுண்டே நின்றது; விளையாட முடியவில்லை. இன்றும் அந்த நிலையில் எஞ்சி நிற்கும் உடல்களே புல் பூண்டு செடி கொடி மரம் முதலியவை. இவற்றை ஓர் அறிவு பெற்ற உயிர்வாழ்க்கை என்று பாகுபாடு செய்வது வழக்கம். இத்தகைய உடலால் பயனில்லை என்று கண்டதும், உடலில் மற்றோர் உணர்வும் வளர்ந்தது. அதுவே சுவை யுணர்வு. அதற்காக வாய் அமைந்தது. உலகம் உற்றும் சுவைத்தும் உணரப்பட்டது. அங்கும் குறையே காணப்பட்டது; அந்த நிலையிலும் உயிர் கட்டுண்டே நின்றது; விளையாட்டு நிகழ வில்லை. நத்தை இப்பி சங்கு கிளிஞ்சல் முதலியவை அந்த நிலையில் எஞ்சி நிற்பவைகளே. அடுத்த முயற்சியாக உடம்பில் முகரும் உணர்வு வளர்ந்தது. அதற்காக மூக்கு அமைந்தது. அவ்வாறு அமைந்தவைகளே செல், ஈசல், எறும்பு முதலியவை. அங்கும் உயிர் வெற்றி பெறவில்லை; உலகத்தை உணரும் வகை குறையாகவே நின்றது. மேலும் முயற்சி வளர்ந்தது. உடலில் ஒளியுணர்வு வளர்ந்தது. அதற்காகக் கண் அமைந்தது.

நண்டு, வண்டு, தும்பி, ஈ முதலியவை இந்த நிலையில் தோன்றியவைகளே. இன்னும் குறை தீரவில்லை ; ஆகையால் வளர்ச்சி முன்னேறியது. அடுத்தபடியாக உடல் ஒலியுணர்வைப் பெற்று வளர்ந்தது. அதற்காகச் செவி அமைந்தது. விலங்குகளும் பறவைகளும் அவ்வாறு தோன்றியவைகளே. இப்போது உயிர் உற்றும் உண்டும் உயிர்த்தும் கண்டும் கேட்டும் ஆடத் தொடங்கியது. இந்த ஆடலும் கட்டுப்பட்ட ஆடல் தான் என்பதை உணர்ந்ததும், உயிரின் விடுதலை வேட்கை தணியவில்லை. முயற்சி மேலும் முன்னேறியது. இந்த முன்னேற்றத்தின் பயனாகவே உயிர் மனம் என்னும் சிறந்த கருவியைப் பெற முடிந்தது. இந்த மனம் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புல ஆற்றலையும்விடப் பேராற்றல் பெற்ற கருவி ; உயிரின் கட்டறுத்து வீடு நல்கும் கருவி ; உயிர்க்கு விளையாட உதவும் கருவி ; உலகப் படைப்பில் மிக மிக உயர்ந்த கருவி.

இந்த மனத்தைப் பெற்றிருந்தும் பண்படுத்தத் தெரியாமல், பயன்படுத்தவும் தெரியாமல் வாழ்நாளைக் கழிப்பவர் பலர். மனம் இருந்தும், உற்று அறிவதே பெரிதாகச் சிலர் வாழ்கின்றார்கள். அவர்கள் வாழ்க்கை மரம் செடி கொடிகளின் வாழ்க்கை போன்றதே. வயிறே வாழ்வாக உண்டு அறிவதே பெரிதாகச் சிலர் வாழ்கின்றார்கள். இந்த வாழ்க்கை நத்தை முதலியவற்றின் வாழ்க்கை போன்றது. உற்றும் உண்டும் முகர்ந்தும் காலத்தைக் கழிப்பவர்களும் உண்டு. இவர்களின் வாழ்க்கையை எறும்பு, ஈசல் முதலியவற்றின் வாழ்க்கையோடு ஒப்பிடலாம். பலவகைக் காட்சிகளைக் கண்டு கண்டு, இதுவே உலகம் இதுவே உலகம் என்று வாழ்நாளைக் கழித்து மயங்குகின்றவர்களும் உண்டு ; இவர்களை வண்டு தும்பி என்று குறிக்கலாம். பலவகை ஒலிகளை - மொழிகளைக் - கேட்டுக்

கேட்டு உலகத்தை உணர்ந்ததாகத் தடுமாறுகின்றவர்களும் உண்டு. இவர்களைக் காக்கை குருவி மான் முயல் முதலியவை களோடு ஒப்பிடலாம். இவற்றோடு மன உணர்வையும் பயன் படுத்த வல்லவர்களையே மக்கள் என்று சுட்டுவது பொருந்தும்.

இன்று மக்கள் உடம்புகள் கோடிக்கணக்காகப் பெருகி யுள்ளன ; ஆனால் மக்கள் உணர்வு பெருகவில்லை. வேறு வகையாகக் கூறினால், மக்களாய்த் தோன்றுவோரின் தொகை பெருகியுள்ளதே அல்லாமல், மக்களாய் வாழ்வோரின் தொகை பெருகவில்லை. அதனால்தான் உலகத்தில் குழப்பமும் கோளாறும் பூசலும் போரும் இன்றும் ஓயவில்லை. இன்பமும் அன்பும் அமைதியும் அறமும் இன்றும் அரும்பொருள் களாகவே உள்ளன.

உலகத்தில் வாழும் இருநூறு கோடி மக்களுள் பலர் மர வாழ்க்கையில் நிற்கின்றார்கள் ; பலர் நத்தைகளாய் வாழ்ந்து நகர்கின்றார்கள் ; பலர் எறும்புகளாய் ஊர்கின்றார்கள் ; பலர் வண்டுகளாய் அலைகின்றார்கள் ; பலர் விலங்குகளாய்த் திரிகின் றார்கள் ; சிலரே மன உணர்வைப் பண்படுத்தி மக்களாய் வாழ் கின்றார்கள். இதனாலேயே, மக்களுக்கு உரிய உறுப்புக்கள் அமைந்திருப்பதைக் கண்டு மக்கள் என்று சுட்டுவது பொருந் தாது என்று திருவள்ளுவர் கருதுகின்றார். கயவர் மக்களே போல் தோன்றினாலும் அவர்கள் வேறு என்றும், மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர்களும் ஊக்கம் இல்லாதவர்களும் மரமே என்றும், மக்கள் வாழ்க்கைக்கு உரிய கல்வி கல்லாதவர் கள் விலங்குகளே என்றும் விளக்குகின்றார் :

**மக்களே போல்வர் கயவர் ; அவர்அன்ன**
**ஒப்பாரி யாம்கண்ட தில்.** (1071)

**அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்**
**மக்கட்பண் பில்லா தவர்.** (997)

உரம்ஒருவற்கு உள்ள வெறுக்கை ; அஃது இல்லார்
மரம் ; மக்கள் ஆதலே வேறு. (600)

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். (410)

இவ்வாறு பல இடங்களில் கூறுவதோடு அமையாமல், ஓரிடத்தில் "உடம்பின் தோற்றத்தால் ஒத்திருப்பது மக்களோடு ஒப்புமை ஆகாது. பொருந்துவதாகிய ஒப்புமை எது என்றால் மக்கட் பிறப்பிற்கு உரிய பண்பால் ஒத்திருப்பதே ஆகும்" என்று இந்த உண்மையைத் தெளிவாக்குகின்றார்.

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. (993)

## காதலின் ஆற்றல்

தன் துன்பத்தை உணர்ந்து வருந்துவதும் தன் இன்பத்தை உணர்ந்து களிப்பதும் எல்லா உயிருக்கும் பொதுவான இயல்பு. ஆனால் மக்கட் பிறப்பில் அமைந்த பண்பு அதைவிடச் சிறந்தது. அதையே திருவள்ளுவர் அறிவின் பயன் என்கின்றார். "மற்றோர் உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் உணராவிட்டால் அறிவால் பயன் உண்டோ?" என்று ஆசிரியர் கேட்கின்றார். அறிவு வளர வளர, இந்தச் சிறந்த பண்பு அமைந்திடும் என்பது அவருடைய கருத்து; அதாவது, அறிவு வளர வளர, தன் துன்பத்தை உணர்ந்து வருந்துவது போலவே, மற்றவர்களின் துன்பத்தையும் உணர முடியும், உணர்ந்து வருந்த முடியும் என்று தெளிவாக்குகின்றார்.

ஒரு காக்கை மற்றொரு காக்கையின் துன்பத்தை உணராது; உணர்ந்து வருந்தும் அறிவு அதற்கு இல்லை. மற்றொரு காக்கை அடிபட்டுக் கீழே விழுந்து கிடக்கும்போது அதைக் கண்டு கா கா என மற்றக் காக்கைகள் கூடிக் கரைகின்

றன. ஆனால் அது துன்பம் உணர்ந்து எழுப்பும் ஒலி அன்று; ஏதோ புதுமை கண்டு மருண்டு எழுப்பும் ஒலியே ஆகும். உணவைக் கண்டபோது ஒரு காக்கை தன் இனத்தைக் கூவிக் கரைவதாகச் சொல்வதும், அதன் வாழ்க்கையில் இயற்கையாக நடைபெறும் ஒரு நிகழ்ச்சி பற்றியே; அது மற்றக் காக்கைகளுடன் பகிர்ந்து உண்ணவேண்டும் என்று விரும்பி அவ்வாறு செய்வதில்லை. எப்போதும் இனமாகவே கூடி வாழ்ந்து பழகிய பழக்கத்தால், அதற்கு உணவுப்பொருள் கண்டதும் இனத்தைப் பற்றிய இயற்கையான உணர்வு ஏற்பட்டுக் கரைகின்றது. மற்றவை கூடி வந்து உண்ணும் போது விட்டுக்கொடுக்கும் உணர்வு காக்கையினிடம் இல்லை. வலிய காக்கையைக் கண்டு மெலிந்த காக்கை ஒதுங்கி நிற்பதும், வலியது கிடைத்த வரையில் உண்டு செல்வதும் காணலாம். ஆகவே, தன் இனத்தின் துன்பத்தை உணர்ந்து வருந்தும் பண்பு காக்கைக்கும் இல்லை என்பது தெளிவு.

பறவைகளின் காதல் வாழ்க்கையும் இப்படிப்பட்டதே. ஒன்றை ஒன்று பிரியாமல் ஆண்பறவையும் பெண்பறவையும் கூடி வாழ்ந்து பழகிவிடுகின்றன. பிறகு ஏதோ காரணமாகப் பிரிய நேர்ந்தபோது, கூடிவாழ்ந்த பழக்கத்தால் பெற்ற இயற்கை உணர்வு துணையை நினைவூட்டுகின்றது. அதனால் துணையைக் கூவி அழைக்கின்றது. அவ்வளவே அல்லாமல், மக்களிடம் உள்ளதுபோல், துணை பிரிந்து எங்கோ சென்றுவிட்டதே என்று அதனுடைய துன்பத்தை நினைந்து உணர்ந்து கூவும் தன்மை இல்லை. கூடு கட்டி முட்டை இட்டுக் குஞ்சுகளைக் காக்கும் வாழ்விலும் இவ்வாறு இயற்கை உணர்வே காரணமாக இருக்கின்றது.

பசு தன் கன்றை நினைந்து கதறுவதிலும் இயற்கை உணர்வே காரணமாக அமைந்துள்ளது. பாலால் மடி கனத்து

நிற்கும்போது கன்றை நாடும் உணர்ச்சி அதற்கு இயற்கையாக ஏற்படுகின்றது. தன்னோடு இருந்து பாலுண்டு பழகிய கன்றைக் காணாதபோது, அந்தப் பழக்க உணர்ச்சியால் கன்றை நினைத்துக் கதறுகின்றது. அவ்வளவே அல்லாமல், கன்றின் துன்பத்தை நினைந்து உருகும் ஆற்றல் அதற்கு இல்லை. ஒரு பசு தன் காலில் அடிபட்டு நோகும்போது வருந்துமே அல்லாமல், தன் கன்றின் காலில் அடிபட்டு இரத்தம் கசியும்போது அதன் துன்பத்துக்காகத் தான் வருந்தாது. ஆனால் மக்கட் பிறப்பில் தாய் தன் குழந்தையின் உடலில் சிறு துன்பம் கண்டாலும் கசிந்துருகுவாள்; கேட்டாலும் கண்ணீர்விட்டு நெக்குருவாள். பசு ஈன்ற கன்றுகள் பல இருக்கலாம்; முன் தன்னிடம் வளர்ந்த கன்றுகளை அந்தப் பசு மறந்துவிடுகின்றது. தாய் ஒருநாளும் அப்படித் தன் மக்களை மறக்க முடியாது. பிறந்து இறந்த குழந்தைகளையும் நினைந்து நினைந்து கண்கலங்குவதே தாயின் தன்மை. அப்போது பாலுண்ணும் கன்றை மட்டும் போற்றி, அதற்கு முன் கன்றாக இருந்து இப்போது வளர்ந்துள்ள மற்றொன்றை முட்டித் துரத்தும் தன்மையையே பசுவினிடம் காணலாம்.

பறவைகளும் விலங்குகளும் தம்மோடு தொடர்புடைய மற்றப் பறவை விலங்கின் துன்பமும் உணர முடியாத நிலையில் இருப்பது கண்டோம். தொடர்பு இலலாத மற்றொரு பறவையின் துன்பத்தையோ, மற்றொரு விலங்கின் துன்பத்தையோ இவைகள் எப்படி உணரமுடியும்? வழியில் காணும் மற்றொரு பறவை உணவு இல்லாமல் வாடிக் கிடப்பதையோ, அடிபட்டு வருந்துவதையோ ஒரு பறவை உணர்வதில்லை. ஒரு பசுவின் உடம்பில் உள்ள புண்ணைக் கண்டு மற்றொரு பசு உணர்வதில்லை. ஆனால் முன்பின் கண்டறியாத ஒரு மனிதன் தெருவில் அடிபட்டு இரத்தம் சொரிந்தால், வழியில் செல்வாரெல்

லாரும் இரக்க உணர்வோடு பார்த்து மனம் உருகுகின்றார்கள். இந்த உணர்வே மக்கட் பிறப்பின் உயர்வைக் காட்டுகின்றது. மற்றொரு மனிதனின் துன்பத்தை உணர்வது மட்டும் அன்று; யாதொரு தொடர்பும் இல்லாத பறவை ஒன்று கல்லடி பட்டுக் கீழே விழுந்து குற்றுயிராய்க் கிடந்தால், அதைக் கண்டு கசிந்துருகும் இயல்பும் மக்களின் மனத்திற்கு உள்ளது. தான் வளர்த்த பசு மட்டும் அல்லாமல், மற்றொரு பசு காலடிபட்டு நொண்டி நொண்டி நடக்குமானால் அதைக் கண்டு மனிதன் இரக்கங் கொண்டு வருந்துகின்றான்.

இந்தப் பொது இயல்பையே அறிவின் பயனாகத் திருவள்ளுவர் கூறுகின்றார்.

> அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
> தன்நோய்போல் போற்றாக் கடை. (315)

இவ்வாறு மற்ற உயிரின் துன்பத்தைத் தன் துன்பம்போல் உணரும் இயல்பை எவரிடத்தும் காணலாம்; எங்கேயிலும் காணலாம்; ஆனால் அதன் முழுமையைக் காணும் இடம் ஒன்று உண்டு; அதுதான் ஒத்த அன்புடைய காதலர் வாழ்க்கை. காதலர் வாழ்க்கையில் ஒருவர் உறும் துன்பம் அவ்வளவும் மற்றொருவரும் உறுகின்றார். இன்னும் ஆராய்ந்தால், அவரவர் தம் தம் துன்பத்திற்காக வருந்துவதைவிட, தம் தம் காதலர் உற்ற துன்பத்திற்காகவே மிகுதியாக வருந்துகின்றனர். காதலன் தன் துன்பமெல்லாம் மறந்து தன் காதலிக்காகவே துயருறுகின்றான்; காதலி தன் வருத்தமெல்லாம் மறந்து தன் காதலனுக்காகவே வருந்துகின்றாள். ஆகவே, பிறர் துன்பம் உணர்வது அறிவின் பயனாக இருக்க, தன் துன்பம் மறந்து பிறர் துன்பம் மட்டுமே உணர்வது காதலின் பயனாக விளங்குகின்றது. மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்தி

உயர்த்த வல்ல ஆற்றல் காதலுக்கு அமைந்திருக்கக் காரணம் இதுவே ஆகும்.

## பண்பாட்டின் அடிப்படை

பிறரை அடக்கி வென்றால்தான், அவர்களுடன் வாழ முடியும் என்று காணப்படும் உலகத்தில், அன்புடையவர்களிடம் அடங்கித் தோற்றுவிடுவது நன்மை என்று காதல் வாழ்க்கை உணர்த்துகின்றது. தன்னிடம் குற்றம் கண்டு காதலி ஊடும்போது காதலன் எதிர்த்து அடக்கி வெல்ல முயலவில்லை; ஆனால் பணிந்து தோற்க முன்வருகின்றான். அதன் பயன் என்ன? குற்றம் கண்டு ஊடிய காதலியின் நெஞ்சமே கசிந்து உருகுகின்றது; "பல பொய்கள் வல்ல கள்வனான காதலனுடைய பணிவான மொழியே என் பெண்மையாகிய அரணை அழிக்கும் படை ஆயிற்று. அதனால் நானும் நெகிழ்ந்தேன்" என்கின்றாள்.

> பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
> பெண்மை உடைக்கும் படை. (1258)

இந்தச் சிறந்த பண்பைக் காதல் வாழ்க்கையில் அல்லாமல் வேறு எங்குக் கற்க முடியும்? இதையே வெளியுலகத்தில் அன்புடையவரிடத்தில் மட்டும் அன்றி அன்பில்லாதவரிடத்திலும் கையாளும்போது அது சால்பு என்னும் அரும்பண்பாகப் போற்றப்படுகின்றது.

> சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
> துலையல்லார் கண்ணும் கொளல். (986)

வல்லமை ஒன்றே வெற்றிக்கு வழி என்று உலகம் சொல்கின்றது. ஆனால், வல்லமை இழந்து மென்மை மேற்கொண்டு இயைந்து நடப்பதால் வாழ்க்கை சிறக்கும் என்று காதல் கற்பிக்கின்றது.

காதலனுடைய கொடுமையைக் கண்டு அவன்மீது வெகுளி கொண்டு காயவேண்டும் என்று காதலி முயல்கின்றாள். ஆனால் அவளுக்கே தன் மென்மையும் அதனால் நெஞ்சு நெகிழும் நெகிழ்ச்சியும் தெரியும். "நெஞ்சே! இப்போது காதலருடைய கொடுமையைப் பொறுக்காமல் வெறுப்போடு எழுகின்றாய். இது பொய்யான காய்வு. ஊடலிலே பொய்யாக வாவது வெறுத்து நிற்க உன்னால் முடியவில்லை. இப்போது முடியுமா? இது வீண் முயற்சி" என்று நெஞ்சை நோக்கிக் கூறுகின்றாள். ஒருமுறை ஊடவேண்டும் என்று அவரிட மிருந்து அகன்று வேறிடத்தில் போய் நின்றாளாம். ஆனால் அவளுடைய அன்பு நெஞ்சம் நிறை இழந்து அவரோடு சேர்ந்து நிற்பதைக் கண்டு ஊடலைக் கைவிட்டாளாம். அத னால், "விடாப்பிடியாக ஊடிக்கொண்டிருப்போம் என்று இது போன்ற நெஞ்சு உடையவர்கள் முயல்வதால் பயன் இல்லை. நெருப்பில் இட்டதும் உருகுகின்ற கொழுப்பைப் போல் உருகும் நெஞ்சு உடைவர்களால் அது முடியாது" என் கின்றாள்.

கலந்துணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு. (1246)

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. (1259)

நிணம்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல். (1260)

காதல் வாழ்க்கையில் இந்தப் பயிற்சியைப் பெற்றவர்கள், இந்த அரும் பண்பை வெளியுலகத்திலும் மேற்கொண்டு வாழும்போது அருளுடையவர்களாகவும் சினமற்றவர்களாக வும் இன்னா செய்யாதவர்களாகவும் போற்றப்படுகின்றார்கள். "தன்னைவிட எளியவரைத் தான் வருத்தச் செல்லும்போது,

தன்னைவிட வலியவர் தன்னை வருத்துமிடத்தில் அவர்முன் தான் அஞ்சி நிற்பதை நினைத்துத் துன்பம் செய்வதைக் கைவிட வேண்டும்." "தன் சினம் பலிக்குமிடத்தில் அதைத் தடுக்க வல்லவனே சினமற்றவன். பலிக்காத இடத்தில் அதைத் தடுத்தால் என்ன? தடுக்காவிட்டால் என்ன? சுடர் மிகுந்த பெருந்தீ வந்து தோய்ந்தாற் போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதிலும் கூடுமானால் அப்போதும் சினம் கொள்ளாமல் இருப்பதே நல்லது." "தம்மேல் செற்றம் கொண்டு ஒருவன் துன்பம் செய்தபோதிலும், திருப்ப அவனுக்குத் துன்பம் செய்யாமலிருப்பதே தூயவர்களின் கொள்கை. தீங்கு செய்தவர்களைத் தண்டிக்கும் முறை எது என்றால், அவர்கள் தாமே நாணும்படியாக அவர்களுக்கு இனிய நன்மையைச் செய்து, அந்தத் தீமையையும் இந்த நன்மையையும் மறந்து விடுவதே ஆகும். துன்பம் என்று தான் உணர்ந்தவைகளை மற்றவனிடத்துச் செய்யாமல் விடவேண்டும்."

வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லு மிடத்து. (250)

செல்லிடத்துக் காப்பான் சினம்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென்? காவாக்கால் என்? (301)

இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. (308)

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். (312)

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். (314)

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். (316)

என்று அறிவுறுக்கப்படும் அரிய அறநெறிகளைக் காதல் வாழ்க்

கையால் பண்பட்டவர்கள் மிக எளிதில் கற்று உயர முடியும். காதலர் ஒருவர் மற்றொருவரிடம் ஒழுகும் அன்புமுறையில் இந்தப் பண்புகள் இயல்பாகவே வந்து அமைகின்றன. ஆதலின் அவற்றை அங்கே கற்றுப் பயின்றவர் வெளியுலக வாழ்க்கையில் அவற்றை மேற்கொள்வது எளிதாகும்.

நம்மை வெறுத்தவர்களை நாமும் வெறுக்க வேண்டும், நம்மைப் புறக்கணித்தவர்களை நாமும் புறக்கணிக்க வேண்டும் என்று உலகம் சொல்கின்றது. ஆனால், புறக்கணித்தவர்களையே மீண்டும் மீண்டும் நாடும் மனத்தால் அன்பு வளரும், மானம் இழந்தாலும் அன்பு வளரும் என்று காதல் வாழ்க்கை கற்பிக்கின்றது. அன்பு வளர்ந்த நெஞ்சிற்கு மானம் என ஒன்று இல்லை, வெறுப்பு என்பது முடியாது, வெறுப்பதாக நெருங்கினாலும் விரும்புவதாகவே முடியும் என்று காதல் வாழ்க்கை கற்பிக்கின்றது. காதலன் பிரிந்து சென்றபோது நெஞ்சை நோக்கிக் கூறும் காதலியின் சொற்களில் இதைக் காணலாம். " நெஞ்சே! நாம் அவரை உறவாகக் கொண்டிருந்தும், அவர் உறவு கொள்ளவில்லை; அவ்வாறு வெறுத்தாரே என்று கருதி நாமும் வெறுத்துக் கைவிடும் வலிமை நமக்கு உண்டோ? இல்லையே" என்கின்றாள். "தம்மை வெறுத்து நீங்கியவர்களைத் தாமும் வெறுத்து நீங்கும் உறுதி உலகத்தில் மற்ற வாழ்க்கைத் துறைகளில் உண்டு. ஆனால் இது காதல்துன்பம் உற்றவர்களுக்குத் தெரியாது" என்று காதல் வாழ்க்கையில் வெறுப்பும் துறவும் கொள்ளமுடியாத தன் நிலையைத் தானே கூறுகின்றாள்.

செற்றார் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். (1245)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன் றன்று. (1255)

இந்தச் சிறந்த கல்வியைக் காதலராக வாழ்ந்து கற்றவர்கள் வெளியுலக வாழ்க்கையில் " வெறுப்புக்கு வெறுப்பு, புறக்கணிப்புக்குப் புறக்கணிப்பு, தீமைக்குத் தீமை " என்று பாராட்டாமல் பிறரிடம் அன்பு செலுத்தி இன்னா செய்தவர்க்கும் இனியவே செய்து வாழ்வது எளிது. காதலர்க்கு இன்றியமையாத இந்தப் பண்பு வெளியுலக வாழ்க்கையில் வளரும்போது சால்பு எனப் புகழப்படும்.

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. (987)

இந்தக் கல்வியைத் தம்மை அறியாமல் கற்றுக்கொள்ள வல்லவர் உண்மைக் காதலர்.

இத்தகைய உயர்ந்த பண்புகளை வளர்த்து மக்களைப் பண்படுத்தும் ஆற்றல் காதல் வாழ்க்கைக்கு அமைந்துள்ளது.

அதனால்தான் தவம், நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்னும் அரும்பொருள்களை விளக்கி வலியுறுத்தியுள்ள திருவள்ளுவர், காதலர் வாழ்க்கையையும் கலையுணர்வோடு விளக்கியுள்ளார். திருவள்ளுவர் போன்ற மெய்யுணர்வு பெற்ற சான்றோரே காதலின் சிறப்பை உள்ளவாறு போற்ற வல்லவர். அத்தகையவர்க்கே காதல் என்னும் பெயரால் பலர் வாழும் போலி வாழ்க்கையின் குறைகளும் தெரியும். அந்தக் குறைகள் போலிகளின் வாழ்க்கையில் இருத்தலைக் கொண்டு காதல் என்னும் தூய மக்கட் பண்பைக் குறைகூறுவது தகுமோ? ஆதலின் திருவள்ளுவர் பிறனில் விழையாமை, வரைவின் மகளிர் என்னும் அதிகாரங்களில் தீயொழுக்கத்தைக் கடிந்தாரே அல்லாமல் காதல் வாழ்க்கையைப் பழிக்கவில்லை. தவத்தின் பெயரால் போலிகள் வாழும் கூடாவொழுக்கத்தைக்

கடிந்தாரே அல்லாமல் தவத்தைப் பழிக்கவில்லை. அதுபோல் நெறி கடந்த காம வாழ்க்கையைக் கடிந்தாரே அல்லாமல் காதலைக் கடிந்து கூறவில்லை. அதனால்தான் காதலின் சிறப்பெல்லாம் தோன்றுமாறு காமத்துப்பாலை இயற்றியுள்ளார்.

## அறிவும் உணர்வும்

அறிவும் உணர்வும் இயற்கையாக அமைந்த பண்புகள். அறிவே இல்லாதவனையும் உணர்வு அற்றவனையும் உலகத்தில் காணமுடியாது. ஆனால் போதிய அளவு வளர்ச்சி இல்லாதவர்களையும் காணலாம்; அறிவு மிகுதியாக வளரப்பெற்றவர்களையும் காணலாம்; போதிய உணர்வு அற்றவர்களையும் காணலாம்; உணர்வு மிகுந்தவர்களையும் காணலாம்.

அறிவும் உணர்வும் வேறுபட்ட இருபண்புகள் ஆயினும் பிரிக்க முடியாதனவாய் உள்ளன. வன்மையும் மென்மையும் இவ்வாறே பல பொருளில் இயற்கையில் அமைந்திருத்தல் காணலாம். வன்மை மிக்க பொருளினிடத்தில் ஓரளவு மென்மையும் காணலாம்; மென்மை மிக்க பொருளினிடத்தில் ஓரளவு வன்மையும் காணலாம். இவ்வாறே அறிவு மிக்கவரிடத்தில் உணர்வும் காணலாம்; உணர்வு மிக்கவரிடத்தில் அறிவும் காணலாம். தருக்கம், கணக்கு முதலிய கல்வித்துறைகளிலேயே காலங் கழிப்பவரும், நெருங்கிப் பழகும் பிறர் துன்பம் கண்டு கரைந்து உருகுகின்றனர்; ஓவியம் காவியம் முதலிய கலைத் துறைகளிலே காலம் கழிப்பவரும், தமக்கு வரும் துன்பத்தை ஒருவாறு தாங்கிக் கலங்காமல் நிற்கும் ஆற்றல் பெறுகின்றனர்.

வன்மை மென்மைப் பண்புகளைத் தனித்தனியே பிரிக்க முடியாவிட்டாலும், வன்மை மிக்க பொருளையும் மென்மை மிக்க பொருளையும் தனித்தனியே பிரிக்க முடியும் அன்றோ? அதுபோல், அறிவையும் உணர்வையும் தனித்தனியே பிரிக்க

முடியாவிட்டாலும், அறிவு மிக்கவரையும் உணர்வு மிக்கவரையும் தனித்தனியே பிரிக்க முடியும்.

அறிவு மிக்கவர் எதைக் கண்டாலும் முதலில் எண்ணத் தொடங்குவர்; பிறகே உணரத் தொடங்குவர். உணர்வு மிக்கவர் எதைக் கண்டாலும் முதலில் உணரத் தொடங்குவர்; பிறகுதான் எண்ணத் தொடங்குவர். ஆண்களில் பெரும்பாலோர் முதலில் எண்ணத் தொடங்குவர்; பெண்களில் பெரும்பாலோர் முதலில் உணரத் தொடங்குவர். ஒரு குடும்பத்தில் தந்தையையும் தாயையும் ஆராய்ந்தே இந்த உண்மையைக் காணலாம். அதனாலேயே ஆண் மூளை சிறந்தவன் என்றும், பெண் இதயம் சிறந்தவள் என்றும் டென்னிசன் என்னும் ஆங்கிலப் புலவர் தெளிவித்துள்ளார். அறிவு மிக்கவர் எதிர்காலத்தைப் பற்றி எண்ணித் தற்காப்புத் தேடிக்கொள்வதில் வல்லவர். உணர்வு மிக்கவரோ நிகழ்காலத்திலேயே மூழ்கித் தம்மை மறந்து தொண்டுசெய்ய முந்துபவர். அறிவு மிக்கவர் உள்ளத்தில் உள்ளதைப் பிறர்க்குப் புலப்படுத்தாமல் மறைக்கும் ஆற்றல் உடையவர்; உள்ளத்தில் உள்ளதற்கு மாருகப் பேசவும் நடிக்கவும் வல்லவர். உணர்வு மிக்கவரோ உள்ளொன்று புறமொன்ருக நடிக்க அறியாதவர்; உள்ளத்தில் உள்ளதை எல்லாம் கண்ணும் முகமும் காட்டப் பளிங்கு போல் விளங்குபவர்.

குழந்தை பிறக்கின்றது. பிறக்கும்போது பெற்றோருடைய மூளை வளர்ச்சிக்கும் இதயப் பண்பாட்டிற்கும் ஏற்றபடி மூளையும் இதயமும் பெற்றுப் பிறக்கின்றது. பிறந்ததும் தாய் ஆசிரியாக விளங்குகின்ருள். குழந்தையின் மூளையையும் இதயத்தையும் வளர்க்கின்ருள். மூளையைவிட இதய வளர்ச்சியே மிகுதியாக ஏற்படுகின்றது. குழந்தை உணர்ச்சியோடு அழுகின்றது; சிரிக்கின்றது. அறிவுகொண்டு சிற்சில

பொருள்களைப் பகுத்தறியத் தொடங்குகின்றது. தந்தையின் தொடர்பு அடுத்தபடியே வாய்க்கின்றது. அவராலும் குழந்தையின் மூளையும் இதயமும் வளர்கின்றன. பெரும்பாலும் மூளையே மிகுதியாக வளர்கின்றது. இவ்வாறே குடும்பத்தில் உள்ள மற்றவர்களாலும் வளர்ச்சி ஏற்படுகின்றது. குழந்தை, விளையாட்டில் பொழுதுபோக்கும் சிறுவன் (அல்லது சிறுமி) ஆகின்றது. உடன்விளையாடும் சிறுவர்களால் வளர்ச்சி மிகுகின்றது. அவர்களாலும் உணர்வு வளர்ச்சியே சிறப்படைகின்றது. அடுத்தபடி பள்ளிக்கூடத்து ஆசிரியரால் ஏற்படும் வளர்ச்சி உள்ளது. அவரால் மிகுதியாக வளர்வது மூளையே. அடுத்த நிலையில் நண்பர்களின் தொடர்பாலும் சுற்றுப்புறத்தின் காரணத்தாலும் பலவகை மாறுதல் நேர்கின்றது. வாழ்வுக்கு உரிய இளமை வருகின்றது. குழந்தையாக இருந்து, சிறுவன் (அல்லது சிறுமியாக) வளர்ந்த அவன் (அல்லது அவள்) உற்ற வயது அடைந்து, விளங்கும் நிலைமை அது. அப்போது அவனுக்கு (அல்லது அவளுக்கு) அறிவு மிகுதியா ? அல்லது உணர்வு மிகுதியா ? கூட்டல் கழித்தல் கணக்கை முதலிலிருந்து பார்த்து முடிவு காண வல்லவர் யார்? பெரும்பான்மை பற்றியே ஒரு முடிவுக்கு வரலாம். சிறுபான்மை விதிவிலக்காக அமைந்திருப்பதும் உண்டு.

பெரும்பாலும் ஆண் இளமை நிரம்பியபோது அறிவு சிறந்து உணர்வும் வளர்ந்து விளங்குகிறான். பெண் இளமை நிரம்பியபோது உணர்வு சிறந்து அறிவும் வளர்ந்து விளங்குகிறாள். இதற்கு உரிய வித்துக்கள் விளையாட்டுப் பருவத்திலேயே காணப்படுகின்றன. அமைதியாக இருந்து பெண் சிற்றில் இழைக்கும் பருவத்தில் ஆரவாரமாக இயங்கி ஆண் சிற்றில் சிதைக்கும் நிலையில் இருக்கின்றான். இவ்வாறே சிறுமியின் மனம் பெரிதும் ஆக்கவேலையில் முனைந்திருக்க,

சிறுவன் மனமோ அழிவு வேலையில் ஊக்கம் காட்டுகின்றது. அதனால் பெண் அமைதி மிக்கவளாக வளர்கின்றாள்; ஆண் ஆற்றல் மிக்கவனாக வளர்கின்றான். இது இயற்கையின் வியக்கத்தக்க முறையாக அமைந்திருக்கின்றது.

ஆனால், அமைதி மட்டும் பெற்றிருப்பதோ, ஆற்றல் மட்டும் பெற்றிருப்பதோ வாழ்க்கைக்குப் போதாது. அமைதிக்கு ஆற்றல் வேண்டும்; ஆற்றலுக்கு அமைதி வேண்டும். இயற்கையே இதற்கும் வழி வகுத்திருக்கிறது. ஆணின் இளமை பெண்ணைக் கவரவும் பெண்ணின் இளமை ஆணைக் கவரவும் கவர்ச்சி அமைத்துள்ளது. உடலில் உள்ள இளமை அழகு மட்டும் அல்லாமல், உள்ளத்தில் உள்ள இளமைப்பண்பும் ஒருவரை ஒருவர் கவருமாறு அமைத்துள்ளது. இத்தகைய தூய கவர்ச்சியே காதல் எனப்படுவது. காதல்உறவினால் ஆற்றல் மிக்கவன் அமைதியைக் கற்கின்றான்; அமைதி மிக்கவள் ஆற்றலைக் கற்கின்றாள்.

காதலன் அறிவும் ஆற்றலும் மிக்கவன்; ஆயினும் காதலால் நெகிழ்ந்து உருகுகின்றான் என்பதைத் திருவள்ளுவர் அங்கங்கே புலப்படுத்திச் செல்கின்றார். காதலியைக் கண்டு மயங்கிக் கண்வலைப் பட்டபோது, அவன் என்ன கூறுகின்றான்? "போர்க்களத்தில் வந்து பொருத பகைவரும் என்னைக் கண்டு அஞ்சினார்கள். போர்க்களத்திற்கு வராத பகைவரும் என் வலிமையைப் பற்றிக் கேட்டறிந்து அஞ்சினார்கள். அத்தகைய என் வலிமை இவள்முன் அழிந்ததே" என்கின்றான்.

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு. (1088)

பகைவர்கள் அஞ்சுவதற்குக் காரணமான இவனுடைய வன்மை எல்லாம் காதலியின் மென்மைக்கு முன் நிற்க முடியவில்லை.

காதலியைக் காணமுடியாமல் வருந்தும்போது ஆற்றாமை காரணமாக அவன் கூறும் சொற்களிலும் காதலின் ஆற்றலையும் அவன் உணர்வு மிகுதலையும் அறியலாம். “ என் உடம்பும் உயிரும் இந்தத் துன்பத்தைப் பொறுக்க முடியவில்லை. மடலேறித் தம்மை அழித்துக்கொள்ள முயல்கின்றன. நாணம் அந்த முயற்சியைத் தடுக்கின்றது. ஆண்மையெல்லாம் இழந்து ஒருத்தியின் பொருட்டாகப் பலரறிய இவ்வாறு அழிவதா என்று தடுக்கின்றது. ஆனால் நாணத்தின் இந்தத் தடையையும் பொருட்படுத்தாமல் நீக்கி உடம்பும் உயிரும் மடலேற முனைகின்றன. நாணமும் நல்ல ஆண்மையும் முன்னெல்லாம் என்னிடம் சிறந்திருந்தன. இப்போது காதலர் ஏறும் மடலே எனக்குத் துணையாக இருக்கின்றது. இவ்வாறு மடலேற வேண்டும் என்று இப்போது மட்டுமல்ல, நடு யாமத்திலும் இதையே எண்ணுகின்றேன். ஏன் என்றால் அந்த யாமத்திலும் காதலியை நினைந்து என் கண்கள் உறங்காமலிருக்கின்றன ” என்கின்றான்.

நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. (1132)

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் ; இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல். (1133)

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற ;
படல்ஒல்லா பேதைக்கென் கண். (1136)

காதலனுடைய ஆற்றாமையை அறிந்த தோழி அவனை நோக்கி, “ ஐய, உன் காதலியே பொறுத்திருக்கும் வல்லமை உடையவளாக இருக்கும்போது நீ இவ்வாறு வருந்தலாமா? பெண்ணைவிட அறிவும் ஆற்றலும் மிகுந்த ஆண் இவ்வாறு வருந்துவதா ?” என்று கேட்டாள். அவனை நோக்கி, “ கடல்

